இரண்டாம் பதிப்பு

Selective Collection

# அணிந்துரைகள்

பேராசிரியர் ந சுப்பு ரெட்டியார் அவர்களின் அனைத்து நூல்களுக்கும் பல அறிஞர் பெருமக்கள் - பல்கலைக் கழகத் துணைவேந்தர்கள், நீதியரசர்கள், தமிழ்ச் சான்றோர், ஆளுநர்கள், அமைச்சர் பெருமக்கள், கல்வித்துறை சான்றோர்கள், மற்றும் பிற பல, பிரபல பேரறிஞர்கள் - அணிந்துரை வழங்கிச் சிறப்பித்துள்ளனர்.

அனைத்து அணிந்துரைகளும், அன்னாரது நூல்களின் திறம், உரம், ஆழம், வீச்சு, ஆராய்ச்சித் திறன், நுண்ணிய இலக்கியத் திறனாய்வு மற்றும் பல சிறப்பியல்புகளை கோடிட்டு குறியிட்டு பாராட்டுகின்றன; பறைசாற்றுகின்றன. மேலும் இவ்வணிந்துரைகள், அன்னாரது நூல்களின் தனிச் சிறப்புகளை - இனிமை, எளிமை, தெளிவு - தெள்ளதின் காட்டி படிப்போரை அக மகிழ்விக்கின்றன.

தொகுப்பாளர்
ஸ்ரீ இரவிச்சந்திரன்



"Persons attempting to find a motive in this narrative will be prosecuted; persons attempting to find a moral in it will be banished; persons attempting to find a plot in it will be shot."
< **Mark Twain**, *The Adventures of Huckleberry*



1916 2016

ந சுப்பு ரெட்டியார் 100

Centenary Committee Publication

# அணிந்துரைகள்

தொகுப்பாளர்
நீ இரவிச்சந்திரன்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பேராசிரியர் ந சுப்பு ரெட்டியார் அவர்களின் அனைத்து நூல்களும் பலஅறிஞர் பெருமக்களின் அணிந்துரைகளைப் பெற்றுள்ளன. அனைத்து அணிந்துரைகளும், அன்னாரது நூல்களின் திறம், உரம், ஆழம், வீச்சு, ஆராய்ச்சித் திறன், நுண்ணிய இலக்கியத் திறனாய்வு மற்றும் பல சிறப்பியல்புகளை கோடிட்டு குறியிட்டு பாராட்டுகின்றன; பறைசாற்றுகின்றன.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939502-8-9

*eBOOK ~ மின் நூல்*



# அணிந்துரைகள்



நீ இரவிச்சந்திரன்
[தொகுப்பாசிரியர்]
தமிழாசிரியர்
மீனாட்சி சுந்தரேஸ்வரர் மேனிலைப் பள்ளி
காரைக்குடி, சிவகெங்கை மாவட்டம;





1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

# DEDICATION




**மறைமலை அடிகள்**

He was proficient in Sanskrit and English and was influenced by the style of English authors. He is well remembered for his excellence in writing in prose. He was one of the earliest Thamizh authors who showed interest in research especially in the field of literary policy. Like his contemporaries he was a staunch Saivaite but had a social reforming motif.

# தொகுப்புரை

என் துரோணாச்சாரியார் !

வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வமாகிவிட்ட நூற்கடல் ந சுப்பு ரெட்டியார் என்னும் துரோணாச்சாரியாருக்கு தமிழ்கூறு நல்லுலகெங்கும் உள்ள ஏராளமான ஏகலைவர்களுள் நானும் ஒருவன். பாரதத்தின் துரோணாச்சாரியார் போலக் கட்டை விரலை வாங்காமல் அறிவுத்தாகம் எடுக்கும் போதெல்லாம் நூலமுதை வாரி வழங்கிய இருபதாம் நூற்றாண்டுத் துரோணாச்சார்யார் இவர்.

கல்வி, அறிவியல், ஆன்மீகம், இலக்கியம் என எந்தத்துறை சார்ந்த நூலாக இருந்தாலும் இவரால் மட்டும் எப்படி இவ்வளவு ஆழமாகவும் அகலமாவும் அதே சமயத்தில் எளிமையாகவும் எழுத முடிகிறது என்று இவருடைய நூல்களைப் படிக்கும் ஒவ்வொரு முறையும் வியப்பதுண்டு.

காலை, மாலை, இரவு என்னும் மூன்று பொழுதுகள் ஒரு நாளை நடத்திச் செல்வதுபோல படித்தல், சிந்தித்தல், எழுதுதல் என்னும் மூன்று செயல்பாடுகள் இவரின் வாழ்வை வழிநடத்திச் சென்றிருக்கின்றன.

அன்னாரது நூற்றாண்டு விழாவினையொட்டி வெளியிட இருக்கும் பல நூல்களில் ஒன்றினை தொகுத்து வழங்கும் பணியினை யான் பெற்றிருப்பது என் பேறு. பேராசிரீயா் ந சுப்பு ரெட்டியார் அவர்களின் அனைத்து நூல்களுக்கும் பல அறிஞர் பெருமக்கள் - பல்கலைக் கழகத் துணைவேந்தர்கள், நீதியரசர்கள், தமிழ்ச் சான்றோர், ஆளுநர்கள், அமைச்சர் பெருமக்கள், கல்வித்துறை சான்றோர்கள், மற்றும் பிற பல, பிரபல பேரறிஞர்கள் - அணிந்துரை வழங்கிச் சிறப்பித்துள்ளனர்.

அனைத்து அணிந்துரைகளும், அன்னாரது நூல்களின் திறம், உரம், ஆழம், வீச்சு, ஆராய்ச்சித் திறன், நுண்ணிய இலக்கியத் திறனாய்வு மற்றும் பல சிறப்பியல்புகளை கோடிட்டு குறியிட்டு பாராட்டுகின்றன, பறைசாற்றுகின்றன. மேலும் இவ்வணிந்துரைகள், அன்னாரது நூல்களின் தனிச் சிறப்புகளை - இனிமை, எளிமை, தெளிவு - தெள்ளதின் காட்டி படிப்போரை அக மகிழ்விக்கின்றன.

சுயசரிதையை இவரளவுக்குப் பரந்துபட்ட தகவல்களுடன் சுவாரசியம் குன்றாமல் விரித்து எழுதியவர்கள் நானறிந்தவரையில் தமிழகத்தில் எவரும் இல்லை. இவருடைய சுயசரிதைதான் என்றாலும், அதில் பலபேருடைய சரிதைகள் இருக்கும். பல்வேறு இலக்கியங்கள் மற்றும் அரிய நூல்களிலிருந்து ஏராளமான மேற்கோள்கள் இடம்பெற்றிருக்கும். இன்னும் சொல்லப்போனால், காரைக்குடிக்கு இவர் வந்த நாள் முதல் பதவிஉயர்வு பெற்றுச் சென்றநாள் வரையில் காரைக்குடியின் அத்தனை இலக்கிய நிகழ்வுகளையும் அற்புதமாகப் பதிவு செய்திருக்கிறார்.

திருமுறைகளிலிருந்தும், திவ்வியப் பிரபந்தங்களில் இருந்தும், கம்பனிலிருந்தும், தாயுமானவரிலிருந்தும், பாரதியிலிருந்தும், வில்லிபாரதத்திலிருந்தும் அன்னார் எடுத்தாண்ட பாடல்களை மனனம் செய்தே என் பேச்சுக்கு நான் வலிமை சேர்த்துக் கொண்டேன்.

திருவாவடுதுறை ஆதீன நேர்முகப் பயிற்சியில் சைவ சித்தாந்தம் கற்றிருந்தாலும் ஐயா அவர்களின் கடித வாயிலான ''*சைவ சமய விளக்கு*'' என்னும் நூலும் ''*சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம்*'' என்னும் நூலும்தான் சைவ சித்தாந்தத்தின் பதி பசு பாசத்தை எனக்குப் பகலவன்போல் வெளிச்சமிட்டுக் காட்டின. சைவம், வைணவம் இவை இரண்டிலும் உள்ள மேன்மையான தத்துவங்களை அனைவரும் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் ஏராளமான நூல்களை எழுதி வெளியிட்டிருப்பது ஆன்மீக உலகுக்கும், ஆன்மீகத்தாகம் கொண்டவர்களுக்கும் ஐயா அவர்கள் செய்த மிகப்பெரிய தொண்டாகும்

அறிவாற்றல், ஆன்மபலம், ஒழுக்கம், நெஞ்சுறுதி என்னும் இவற்றை மட்டுமே பெற்றிருந்து எந்த விதமான சாதி மதப் பின்புலங்களும் இல்லாமல் ஐயா அவர்கள் எல்லாச் செயல்களிலும் எதிர்நீச்சல் போட்டு வெற்றிபெற்ற நிகழ்வுகளைப் படிக்கும்போது, சாதி மதப் பின்புலங்கள் இல்லாமல் அறிவையும், ஒழுக்கத்தையும் மட்டுமே பின்புலமாகக் கொண்ட ஒவ்வொரு மனிதனும் வாழ்வின் மீதான நம்பிக்கையைப் பெறமுடியும் என்பது திண்ணம்.

தம் நிறைவான வாழ்க்கையின் ஒவ்வொரு வினாடியையும் தனக்கும் பிறர்க்கும் பயனள்ள வகையில் வாழ்ந்து பத்து அறிஞர்கள் ஆற்ற வேண்டிய பணிகளைத் தாம் ஒருவரே ஆற்றி அன்னைத் தமிழுக்கு அணிகலன்கள் அணிவித்திருக்கிறார். வையத்திலிருந்து உடலால் மட்டுமே விடைபெற்று வானுலகில் அறிவு நட்சத்திரமாய் ஒளிவீசும் ஐயாவின் நூற்றாண்டு விழாவின்போழ்து, அவரைப்பற்றிய நூலொன்றை தொகுப்பதற்கு அரிய வாய்ப்பினை நல்கிய நூற்றாண்டு விழாக் குழுவினர்க்கு அகம் கனிந்த நன்றி தெரிவித்து நிறைவு செய்கிறேன்.

**நீ இரவிச்சந்திரன்**

**N Ravichandran**
**Tamil Teacher**
**SMSV Hr Sec School**
**Karaikudi – 630 001**

# அணிந்துரை

**இரா காமராசு**
**எழுத்தாளர்**
பொதுக்குழு உறுப்பினர், சாகித்திய அகாதெமி, புதுதில்லி
பொதுச்செயலாளர், தமிழ்நாடு கலை இலக்கிய பெருமன்றம், சென்னை
உதவிப்பேராசிரியர், இலக்கியத்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

அப்பாகுடில்
4/664, பாரதிதாசன் நகர்
குமரபுரம், மேலவாசல்
மன்னார்குடி – 614 014

பேசி: 04367 224724
அலைபேசி: 94435 89189
Kamarasu_era@yahoo.com

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

## பேராசிரியரின் அறிவுக்கொடை

தமிழ் மொழி, இலக்கிய வளர்ச்சிக்குத் தங்களை அர்ப்பணித்தவர்கள பலர். மரபையும், நவீனத்தையும் இணைத்து முன்சொல்லவேண்டியச் சூழலை சிலர் உருவாக்கினர். ஏடுகளை அச்சு ஏற்றுதல், உரை எழுதுதல், இரசனை முறையில் விவரணை செய்தல் என்பவை தொடக்கநிலை முயற்சிகள்.

தமிழ்க் கல்விப் புல உருவாக்கம் அடுத்து நிகழ்ந்தது. மரபிலக்கண, இலக்கியங்கள் புதுநெறியில் கற்கவும், கற்பிக்கவுமாக பல எடுகோள்கள் நடந்தன. அதுவரை அறியப்படாத இலக்கியங்களின் அறிமுகம் பரவலாக்கம் பெற்றது. இரசனை என்பதைத் தாண்டி பல்துறைப் பலகனியாக பண்டைய இலக்கியங்கள் திறப்பு செய்யப்பட்டன. பாடசாலைகளில் பட்டங்கள் நோக்கி நகர்ந்த ஆரம்பகாலத் தமிழ்க் கல்விக்கு ஏராளமான இலக்கிய விளக்குநர்கள் தேவைப்பட்டார்கள். இதன் தொடர்ச்சியில் ஆய்வுகள் பலவும் முகிழ்த்தன. நூல்கள் பல்கிப் பெருகின. தமிழ் அறிவு மரபின் நீட்சி நவீன மயமானது இந்நிலையில்தான்.

இத்தகு தமிழ் இலக்கண-இலக்கியப் பாய்ச்சலின் விளைவுகளில் ஒன்றாக பேராசிரியர் ந சுப்பு ரெட்டியாரின் பங்களிப்பு அமைகின்றது.

பேராசிரியர் ந சுப்புரெட்டியார் பல்கலைவித்தகர். வாழ்நாள் முழுக்க எழுதிக்குவித்தவர். அவருடைய ஆய்வுக்களம் விரிவானது. தொல்காப்பியம், நன்னூல் என இலக்கணங்கள் தொடங்கி சங்க இலக்கியம், நீதி இலக்கியம், காப்பியங்கள், பக்தி இலக்கியம், சித்தர்கள் வரை நீண்ட ஆய்வுப் பயணம் செய்தவர். சமய உலகை மெய்யியல் நோக்கில் அலசியவர். சைவம்,
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

வைணவம் இரண்டின் ஆழத்தையும் கண்டு உணர்த்தியவர். கம்பர், வள்ளுவர், பாரதி, பாரதிதாசன், பெரியார்......... எனத் தமிழின் ஆக்கச்சக்திகளை ஆய்வு செய்தவர். எல்லாவற்றுக்கும் மேலாக கல்வியியல் நுட்பங்களை, புதுமைகளை, கோட்பாடுகளைத் தமிழ் மாணவர்களுக்கு அறிமுகம் செய்தவர்.

இவரின் நூற்றுக்கணக்கானப் படைப்புகள் யாவும் தமிழ் இலக்கியக் கல்விக்கும், கல்வியியல் கல்விக்கும் அடிப்படைத் தரவுகளாக விளங்குகின்றன. பரந்து பட்ட நூலறிவும், பன்மொழி ஆற்றலும், ஆய்வு நேர்மையும், ஒப்பீட்டுரைக்கும் பாங்கும், தருக்கமுறை விளக்கங்களும், அழகிய, எளிய உரைநடைக்கூறுகளும் பேராசிரியரின் ஆய்வுகளைப் படைப்புகளாக உயர்த்தும் வல்லமை வாய்ந்தவை.

பேராசிரியரின் படைப்புகளுக்கு புகழ்பெற்ற அறிஞர்கள், கல்வியாளர்கள், சான்றோர்கள் அருளிய அணிந்துரைகள் இங்கு தொகுக்கப்பட்டுள்ளன. இதன் வழி பேராசிரியரின் நட்பும், தொடர்பும், அறிவுலக ஏற்பும் இளைய தலைமுறைக்குத் தெரியவரும். இந்த அணிந்துரைகள் தமிழ் இலக்கிய வரலாற்றில் இடம் பெறத்தக்கவை. நவீனத்தமிழ் உரைநடைக்கும், தமிழ்க்கல்விக்கும் பேராசிரியரின் அறிவுக்கொடையினை இச்சிறுநூல் வெளிச்சப்படுத்தும்.

பேராசிரியரின் படைப்புகள் நூலடைவாகவும் ஆய்வாளர்களுக்கு இந்நூல் துணைநிற்கும். இணையம், கணினி ..... என எவ்வித வசதியும் அற்றச்சூழலில் தாமே முயன்று முதல் நிலை ஆய்வுகளை உருவாக்கியப் பேராசிரியர் ந சுப்புரெட்டியார் உழைப்பும், நேர்மையும் குன்றி வரும் இன்றைய தமிழ் ஆய்வுலகுக்கு முன்மாதிரியாகக் கொண்டாடத்தக்கவர் என்பதை இந்நூல் சுட்டும்.

இதனை அரிதின் முயன்று தொகுத்துள்ள தொகுப்பாசிரியர் நீ இரவிச்சந்திரன் பாராட்டுக்குரியவர். பேராசிரியரின் நூற்றாண்டை பல்முனைகளில் முன்னெடுக்கும் நூற்றாண்டு விழாக்குழுவினர்க்கும் இவ்வேளையில் நன்றி கூறவேண்டும். ஆய்வாளர்களுக்கும், வாசகர்களுக்கும் இந்நூல் பயன்நல்கும்.

*~~~~~~~~~~*

# உள்ளடக்கம்



001

FOREWORD

அணிந்துரைகள்
[Forewords]

## பின்னிணைப்புகள்

082 காலக்கோடு ~ வாழ்க்கை
[TIMELINE – Life]
086 காலக்கோடு ~ நூல்கள்
[TIMELINE – Books]
091 காலக்கோடு ~ பாராட்டுதல்கள்
[TIMELINE – Honour]
092 காலக்கோடு ~ அறக்கட்டளைகள்
[TIMELINE – Endowments]
094 பேராசிரியரின் ஆசிரியப்பெருமக்கள்
[Professor's Teachers]
096 பணி
[Service]
098 பதவிகள்
[Positions]
101 தொடர்புடையோர்
[Friends & Associates]



*"A writer should write what he has to say and not speak it."*
~ Ernest Hemingway




# அணிந்துரைகள்

# Forewords

**The** unique feature one could find among the books of Professor is that almost all his books carry a 'FOREWORD' from eminent personality in several walks of life. Professor's broad outlook in selecting these persons is apparent, if one studies the variety and ranges of persons chosen by him for getting 'Foreword' for his books. The amazing range includes educational administrators, headmasters, professor of Tamil, professor of Saiva Siddhantha, professor of Economics, Vice-chancellors, his guide, philanthropists, his relatives, his students, religious heads, bureaucrats, ministers, chief ministers, governors, Tamil scholars, linguists, editors, principals, judges, technocrats, advocates, social workers, industrialists, etc,. Select samples are exhibited here.








# 1949



**கவிஞன் உள்ளம்**

**Kavignan Ullam**

Foreword by:
P Sri Acharya, Tamil Scholar

******

*''இந்த ஆசிரியரின் தமிழ் நடை காலத்திற்கு இசைந்து வளர்ந்து வரும் நடைதான், வளரும் தமிழில் மலரும் இலக்கியத்திற்கு உரிய நடை. இத்தகைய நடைதான் 'நல்லதமிழ்' இக்காலத்திற்கு சங்க நூற் கட்டுரைகளையும் இத்தகைய வசன நடையில் எழுதினால்தான், சாதாரண உலக இன்பம் முதல் உயர்ந்த கொள்கைகள் வகையில் அறிஞர்கள் சங்க இலக்கியங்களிலே கண்டு களிக்கிறார்களே, அந்தக் கருத்துச் செல்வம் முழுவதும் சாதாரண மக்களுக்கும் பயன்படுவதாகும்.''*



# 1957



***கலிங்கத்துப் பரணி ஆராய்ச்சி***

**Kalingathu Parani Aaraichi**

Foreword by:
*Tamizh Kadal* Raya Cho,
Tamil Savant, Karaikudi, Tamilnadu

******

*‘‘நடையறாப் பெருந்துறவியாகிய தாயுமான அடிகளும் இப் பரணி நூலின் கடைதிறப்புப் பகுதியில் உள்ளத்தைப் பறிகொடுத்து ‘‘உபயதனம் அசையில்’’ என்ற தாழிசையை எடுத்துத் தமது பாட்டில் நயம்படக் கொண்ட முறையை இத்திறனாய்வு நூலில் எடுத்துக் காட்டியிருக்கிறார் அன்பர் சுப்பு ரெட்டியார்.’’*

*‘‘அன்னார் கலிங்கத்துப் பரணியை நன்கு ஆராய்ந்து ஆங்காங்குள்ள நயங்களை யெல்லாம் இந்நூலில் அழகுபட எடுத்துக் காட்டியிருக்கிறார்.’’*

*‘‘கடைதிறப்பின் உட்பொருள்’ என்ற பகுதியில் திரு. ரெட்டியார் காட்டியிருக்கும் கருத்தே கொள்ளத்தக்கது.’’*




# 1957




**தமிழ் பயிற்றும் முறை**
Tamil Payitrum Murai

| **Foreword by:**<br>**TS Avinashilingam**<br>**Former Education Minister, TN** | **Foreword by:**<br>**S Thiruvenkatachari**<br>**Professor of Education**<br>**Dr Algappa Chettiar Training College** |
|---|---|
| **"…இதற்கு தேவையான புத்தகங்கள் தமிழில் இல்லையே என்று சிலர் கூறுகின்றார்கள். இந்தக் குறையை நீக்க பேராசிரியர் ந சுப்பு ரெட்டியார் முன்வந்திருப்பது பாராட்டத்தக்கது."**<br><br>**"…… தாய் மொழிப் பயிற்சியைத் தவிர அத்துடன் தொடர்பாக இருக்கவேண்டிய நவீன முறைகள் பற்றிய பிற செய்திகளும் சேர்க்கப் பெற்றிருப்பதாக அறிகின்றேன். அவருடைய புத்தகம் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளிலும் பயிற்சிப் பள்ளிகளிலும் பயிற்சி பெறும் மாணாக்கர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்று நம்புகிறேன்."** | ".. Professor Reddiar has not however, discarded what is of essence in the writings of experts in Linguistics. The merit of his work lies in its eclectic approach and what Western educational thinking has to furnish as its cream. The bibliography at the end of the book is the key to the way the author's mind must have worked at the time of his writing the book."<br>".. The value of this work is bound to increase with the greater realization of the new contribution it has made and the new vistas it has opened up to the teachers of Tamil for whom it is primarily intended." |



# 1958



### காலமும் கவிஞர்களும்
### Kaalamum Kavignarkalum

Foreword by:
Sri P Duraikannu Mudaliar, Principal,
Dr Alagappa Chettiar Training College, Karaikudi

******

*''மேற்கூறிய வகைகளில் பேராசிரியார் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் எழுதி உதவியுள்ள '**காலமும் கவிஞர்களும்**' என்ற முதற் கட்டுரைத் தலைப்பையே மகுடமாகக் கொண்டது இந்நூல். கவிஞர்களின் வழிபாடு அமைந்து மிளிரும் நற்றமிழ் நாட்டுக் கவிதைகள், காவியங்கள், இறைவழிபாடுகள் அறிவியல் ஆற்றல்கள், வாணிக முறைகள், நமது மொழியின் வரலாற்று இலக்கணங்கள் ஆகிய கருத்துக்களைத் திறனாய்வு முறையில் தெளிந்த நடையல் பன்னிரு கட்டுரைகளாக அடக்கிக்கொண்டு ஒரு கட்டுரை கருவூலமாகத் திகழ்கின்றது.''*

*''கட்டுரைகள் யாவும் பழமையையும் புதுமையையும் இணைத்து வழுவின்றி வருங்காலத்திற்கு ஏற்ற கருத்துக்களை வழங்குகின்றன. தமிழ் மாணவர்களும், பொது மக்களும் இவற்றினைப் படித்துத் தமிழ்க் கலையின் பல கோணங்களைக் காணலாம்.''*




# 1958



***அணுவின் ஆக்கம்***

**Anuvin Aakkam**

Foreword by:
*Bharat Ratna* Dr C Subramaniyam

******

*''உயரிய விஞ்ஞானக் கருத்துக்களைத் தமிழில் சொல்ல முடியுமா? இதற்கு விடையளிக்கும் முறையில் திரு. சுப்பு ரெட்டியார் '**அணுவின் ஆக்கம்'** என்ற நூலை எழுதி முடித்திருக்கிறார்.''*

*''அணு அறிவைப் பற்றிய அரிய கருத்துக்களைச் சாதாரண மக்களும் புரிந்துகொள்ளக்கூடிய முறையில் இந்நூல் எழுதப்பெற்றிருப்பது மிகவும் வரவேற்கத்தக்கது. புதிய புதிய விஞ்ஞானப் பதங்களைக் கையாண்டிருப்பது தமிழுக்குப் புதியதொரு வளத்தைக் கொடுக்கின்றது.''*




# 1961



**கவிதைய நுபவம்**

**Kavithaiyanubhavam**

Foreword by:
Dr A Chidambaranatha Chettiar, Chief Editor, English-Tamil Dictionary, University of Madras, Chennai - 600 005, Tamilnadu

******

“The author is quite competent to write on the subject, for he has considerable experience in imparting instruction on the methods of teaching poetry."

"I agree with the author that students have to be taught the way in which they should approach poetry and the way in which they can appreciate poetry. I am sure that a perusal of this book will help hundreds of students of literature to enjoy poetry better. Any book that enhances our delight in that direction is a welcome addition. Let me congratulate Mr Reddiar on the able way in which he has treated this rather difficult subject."




# 1961




***கல்வி உளவியல்***

**Kalvi Ulaviyal**

Foreword by:
GR Damodaran, Principal,
PSG College of Technology, Coimbatore, Tamilnadu

******

*''இந்நூல் மாணவர்களுக்குப் பாடங் கற்பிக்கும் ஆசிரியர்களுக்கே யன்றித் தம் குழந்தைகளின் கல்வி வளர்ச்சியில் பெரிதும் நாட்டமுடைய தமிழ்ப் பொது மக்களுக்கும் மிகவும் பயனளிப்பதாகும். இத்தகைய நூல்கள் தற்போது தமிழ்நாட்டிற்கு மிகமிகத் தேவையாகும். இதுவரை கல்வி உளவியலைப் பற்றி வெளிவந்துள்ள தற்கால அரிய கருத்துக்களை மிகச் செம்மையான முறையில் இந்நூலில் அமைத்து விளக்கியுள்ளார் இந்நூலாசிரியர். இவர் தம் வகுப்பறையில் உளவியலைப் பயன்படுத்திப் பாடம் கற்பிப்பவர் என்பது இந்நூலின்று நன்கு விளங்குகின்றது. தற்காலக் கல்வியியல் கொள்கைக்கும் நம் பழைய இலக்கியங்களிலிருந்து புலனாகும் பழங்காலக் கொள்கைகளுக்கும் ஒற்றுமை காணும் இவர் திறத்திலிருந்து இவர்தம் உளவியல் நுட்பம் புலனாகிறது.''*




# 1963




**தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை**

**Tolkappiyam Kaattum Vazhkkai**

| Foreword by: Dr M Varadarajanar, Professor of Tamil, University of Madras | Foreword by: Prof A Srinivasa Raghavan, Principal, VOC College, Tuticorin, Tamilnadu |
|---|---|
| *''இத்தகைய சிறப்புடைய நூற்பகுதியைத் திறம்பட ஆராய்ந்து தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை என்னும் இந்நூல் வடிவில் விளக்கியுள்ளார். தமிழ்ப் பேராசிரியர், திரு. ந. சுப்பு ரெட்டியார். அவர் அறிவியல் துறையிலும் பட்டம் பெற்ற அறிஞர். அவ்வளவில் நில்லாமல், தொடர்ந்து உளவியல் முதலிய துறைகளில் நூல் பல கற்றுத்தேர்ந்து தமிழில் நூல் பல இயற்றியுதவியவர். ஆதலின், தொல்காப்பியப் பொருளதிகாரத்தை ஆராயுங்காலத்தும் இவர்க்கு உளவியல், உயிரியல் முதலிய அறிவியல் துறைகள் மிகப் பயன்பட்டுள்ளன என்பதை இந்நூலில் காணலாம்.''* | "This work on 'TOLKAPPIYAM' covers almost all aspects of that ancient classic. Its discussions are full, its analysis of TOLKAPPIYAM and its commentaries keen and learned and its judgment, on the whole, marked by restraint and balance. Prof Reddiar has given us a patiently-evolved and carefully-worded thesis on a recondite theme, one that will prove helpful to all earnest students of old Tamil literature." |




# 1964




***இல்லற நெறி***
**Illara Neri**

Foreword by:
Dr Soundaram Ramachandran,
Minister of Education [State], Govt of India

******

*''வேலனுக்கு வேங்கடத்தான் எழுதும் கடிதங்கள் மூலமாக ஆசிரியர் இல்லற நெறியைப் பலகோணங்களிலிருந்தும் விளக்கியிருக்கின்றார். ஆங்கிலத்தில் இதுபோன்ற புத்தகங்கள் ஏராளமாக உள்ளன. இளத்தம்பதிகள் அவைகளை விருப்பத்துடன் படிக்கின்றனர். தற்காலத் தேவைக் கேற்பத் தமிழில் அத்தகைய நூல்கள் மிகவும் அவசியம். பேராசிரியர் ரெட்டியார் அந்த அவசியத்தை உணர்ந்து அதனை ஒருவாறு நிறைவேற்ற முன் வந்தது மிகவும் பாராட்டுதற்குரியது.''*




# 1966




அணுக்கருபௌதிகம்

**Anukkaru Bhautheekam**

Foreword by:
*Bharat Ratna* C Rajagopalachari,
Former Governor-General of India

******

"I can understand the difficulties of a translator of scientific books and I tender my congratulations to Prof. N. Subbu Reddiar on his having won the prize for the best translation of Heisenberg's "**Nuclear Physics**".




# 1967




***அறிவியல் விருந்து***

**Ariviyal Virundhu**

Foreword by:
Sri AS Narayanaswamy Naidu, Principal,
G Venkataswamy Naidu College, Kovilpatti, Tamilnadu

******

*''இந்நூலிலுள்ள கட்டுரைகளைப் பாராட்டி யுரைத்தலின்றி மதிப்பிட்டுரைத்தல் என்பது எளிதன்று. ஒவ்வொரு கட்டுரையும் அறிவியலாகிய மாற்றுயர்ந்த தங்கத்தாலியன்று பழமையாகிய மணிகள் குயிற்றிடப் பெற்றுப் பேரழகோடு திகழ்கிறது.''*

*''தமிழ் நடை மிக நன்றாயமைந்துள்ளது. எத்தகைய அறிவியலுண்மைகளையுங் கூறுவதற்கு தமிழ் மொழி வளையும் வளமுடையதென்பதைத் தெளியும்படி யிவர் தமிழ் இயைந்துள்ளது. இத்தகு முயற்சியால் ஈடுபாடும் புலவர்கட்கு இவர் நடை ஒரு நல்ல வழிகாட்டியாகும். தமிழ்கூறு நல்லுலகம் இவர்தம் நற்பணியைப் பாராட்டி நன்றியறிதலைக் காட்டுவதாக.''*




# 1971




***மலை நாட்டுத் திருப்பதிகள்***

**Malai Naattu Thirupathikal**

Foreword by:
Justice S Maharajan

******

*“ஒன்றினோடு ஒன்றொவ்வாப் பல துறைகளிலும் பாண்டித்தியம் பெற்றவர் டாக்டர் சுப்பு ரெட்டியார். அவருடைய விரிந்த படிப்பைக் கண்டு நான் அஞ்சிய காலம் ஒன்றுண்டு. பல ஆண்டுகளுக்கு முன் அவரைக் காரைக்குடியில் சந்தித்தபோது, ‘‘எதற்காக நீங்கள் இவ்வளவு படிக்கின்றீர்கள்? கொஞ்சம் படிப்பைக் குறைத்துக் கொண்டால் நலமாயிருக்கும்’’ என்று அவரிடம் சொன்னேன். மித மிஞ்சிய படிப்பு கவனத்தைச் சிதறடித்து விடுமே என்ற அச்சத்தால் அவ்வாறு சொன்னேன். ஆனால், இந்நூலைப் படித்த பிறகு என்னுடைய அச்சம் மறைந்துவிட்டது. ஆசிரியரின் பிடிக்குள் அடங்காத படிப்பு, பக்தியென்ற சூரிய காந்தக் கல்லில் புகுந்து ஒருமையும் பயனும் பெற்று விட்டது.’’*




# 1975




***திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்***
**Thiruvengadamum Tamizh Illakiyamum**

Foreword by:
*Padma Sri* ND Sundaravadivelu,
Vice-Chancellor, University of Madras

******

*''டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் முறையாகத் தமிழைக் கற்றுத் தேறிய அறிஞர். ஆழ்ந்த புலமையும் கட்டுரைத் திறனும் சொல்லாற்றலும் மிக்கவர்.''*

*''**திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்**' என்னும் தலைப்பில் டாக்டர் ரெட்டியார் ஆற்றிய சொற்பொழிவுகள் நம்மைச் சங்க காலத்திற்கு அழைத்துச்செல்கின்றன. இடைக்காலத்திற்கு இட்டு வருகின்றன. பிற்காலத்திற்கும் கொண்டுவந்து நிறுத்துகின்றன.''*

*''விரிந்த தமிழ் இலக்கியத்தின் பல்வேறு இடங்களை அறிமுகப்படுத்தும் இச்சொற்பொழிவுகள் தமிழ்ப் பற்றாளர்களுக்குத் தித்திக்கும். அதுமட்டுமா? பெரிதும் சமயத் தொடர்புடைய திருவேங்கடத்தைப் பற்றிய சொற்பொழிவுகள் பக்தர்களுக்கும் பரவசமூட்டும்.''*




# 1976




***அறிவியல் தமிழ்***

**Ariviyal Thamizh**

Foreword by:
*Silamboli* S Chellappan,
Directorate of Tamil Development, Govt of Tamilnadu

******

*''அம்பலத்தே ஆடும் அம்பலவாணனின் திருக்கூத்தை அணுவின் ஆனந்தக் கூத்தாகவே கண்டு மகிழ்கின்றார் ஆசிரியர். அணுபற்றிய இன்றைய அறிவியற் கொள்கைகளை அன்றே தமிழ்ச் சான்றோர் அறிந்திருந்தனர் என்று எடுத்துக் காட்டியுள்ள திறம் பாராட்டத்தகுவது.''*

*''ஆழ்வார்களின் பாடல்களில் ஆசிரியர் ஆழங்கால்படுவது போலவே அவருடைய கட்டுரைகளில் நாமும் ஆழங்கால்படுகிறோம்.''*




# 1977




***பாண்டிநாட்டுத் திருப்பதிகள்***
**Pandinattuth thiruppathikal**

Foreword by:
Justice PS Kailasam

******

*''தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டின் பதினெட்டு திவ்விய தேசங்களைத் தாம் சென்று தரிசித்ததோடு நில்லாமல் நம்மையும் தன்னோடு கூடவே தம் அருமையான எழுத்தாற்றலால் அழைத்துச் சென்று வைணவ தரிசனம் செய்துவைக்கின்றார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். திருக்கோட்டியூரிலே தொடங்குகின்ற இவர்தம் பக்திப் பயணம் திருக்குறுங்குடியிலே போய் முடிவடைகின்றது. இத்தனைத் திருப்பதிகளையும் இவரோடு தரிசிக்கின்ற நாம் 'மறந்தும் புறந்தொழா மாந்தராய்' மாறி விடுகின்றோம்.''*

# 1978




**Studies in Arts and Science**

Foreword by:
Justice SS Ismail

******

"It was characteristic of the man that this volume, instead of being a more garland of praises is a mine of information in several fields of knowledge and contains 85 articles by recognized academicians and authorities in different disciplines."

'...It is again characteristic of Prof Reddiar that in collecting these articles and publishing them, his sole interest is to utlilize the sale proceeds for instituting an endowment in Sri Venkateswara University itself."




# 1980




***வடநாட்டுத் திருப்பதிகள்***
**Vada Nattu Thirupathikal**

Foreword by:
Justice S Suryamurthi

******

*‘‘சைவ சமயத்தைச் சார்ந்த பேராசிரியர் டாக்டர் ரெட்டியார் பல்லாண்டுகள் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்றவர். திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் ஆழ்வார்கள் பாசுரங்களில் மிகவும் ஈடுபட்டுத் தம் மனத்தைப் பறிகொடுத்தவராதலால் வைணவ தத்துவத்தைப் பேசும் போதும், எம்பெருமானின் அநந்த கல்யாண குணங்களை எடுத்துரைக்கும் போதும், அவனுடைய வெற்றிச் செயல்களையும் வீரச் செயல்களையும் எடுத்துக் கூறும்போதும், வியக்கத்தக்க ஈடுபாட்டோடும், தோய்ந்த உள்ளத்தோடும், விரிந்த மனநிலையோடும் தம்மையே மறந்த நிலையை எய்தி விடுகின்றார்.’’*




# 1980




**சோழநாட்டுத் திருப்பதிகள் I**
**Chola Nattu Thirupathikal - I**

Foreword by:
Justice S Ramanujam

******

*''சைவ சமயத்தைச் சாரந்தவர் பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் என்பதை நாங்கள் ஒன்றாகச் சேர்ந்து பயின்ற போதே அறிவேன். வைணவச் சமயத்தைச் சார்ந்த நான் இன்று வைண சமயத்தில் பேராசிரியர் ரெட்டியார் இவ்வளவு ஊற்றம் பெற்றிருப்பதையும் ஆழ்வார் பாசுரங்களில் மிகவும் ஆழங்கால் பட்டிருப்பதையும் காணும்போது எனக்குப் பெருவியப்பு ஏற்படுகிறது. ஆழ்வார் பாசுரங்களில் இவர் தன்னைப் பறிகொடுத்திருப்பதை நூலெங்கும் காணலாம்.''*




# 1981



**சோழநாட்டுத் திருப்பதிகள் II**
**Chola Nattu Thirupathikal - II**

Foreword by:
Justice PR Gokulakrishnan,
Chief Judge, Gujarat High Court

******

*''உழைப்பால் உயர்ந்து உள்ளத்தால் சிறந்து, செந்தமிழைச் சுந்தரத் தெலுங்கு நிலவும் நாட்டிலேயும் பரப்பிப்பெருமை கண்டவர் பேராசிரியர் ரெட்டியார் அவர்கள். அறிவியலைத் தவிர, தமிழிலேயும், குறிப்பாக வைணவ சமயத்திலேயும், அறிவாற்றலும், ஆழ்ந்து ஈடுபாடும் கொண்டவர் ரெட்டியார் அவர்கள்.''*

*''திருப்பதிகளின் பெருமைகளை எடுத்து விளக்கியிருக்கும் தன்மை நம்மையே அறியாமல் அத்திருத்தலங்களுக்குச் சென்று பார்க்க வேண்டுமென்ற அவாவினை நம்மிடம் எழுப்புகிறது.''*



# 1981

***அகத்திணைக் கொள்கைகள்***

**Akathinaik Kolkaikal**

Foreword by:
Dr VSp Manickam, Vice-Chancellor,
Madurai-Kamaraj University, Madurai, Tamilnadu

******

*‘‘நண்பர் பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் துறை பலவல்ல ஒரு பெருந்தமிழ்ப் பேராசிரியர் என்பதனை நாடறியும். ஐம்பூத நுட்பவியலை அழகான தமிழில் ஆற்றலுடன் எழுத முடியும் எனத் தமிழின் மொழியாண்மையைக் காட்டி மூன்று பரிசு பெற்றவர். பாடநூலாகப் பழைய அறிவியலை எழுதித் தமிழைப் பிற்படுத்தாமல் புத்தம் புதிய அறிவியல் பிடிப்புக்களை வளருந் தமிழில் வரையாது எழுதி வரும் ஆக்க எழுத்தாளர்; இத்தனிச் சிறப்பு இத்தமிழ்ப் பேராசிரியர்க்கே உண்டு.’’*

*‘‘நூலின் தலைப்புக்கள் மரபான வரிசையான கோவைத் தலைப்புக்களாக இருந்தாலும் ஒவ்வொரு பகுதியின் கீழும் விரிந்த விளக்கமும், பரந்த மேற்கோளும் முரண் அறுக்கும் சான்றும், காலச் சாயலும் நீரோட்டம் போல் தொடர்ந்து வருகின்றன.’’*




# 1982




*முத்தி நெறி*

**Muthi Neri**

Foreword by:
Justice V Ramasamy

******

*''இந்தப் பனுவல் வைணவத்தையும் விசிட்டாத்வைதத்தையும் தெளிவாக விளக்கும் ஓர் அற்புதப் படைப்பு. மனத்தில் கருத்துக்கள் ஆழப்பதிவதற்காகக் 'கடித உத்தி' முறையைக் கையாண்டுள்ளார் இதன் ஆசிரியர். பாயிர இயலில் வாமன, அவதாரம் போல் சுருக்கமாக அமைந்த கருத்துக்கள் நூல்முழுவதும் திரிவிக்கிரம அவதாரம்போல் வளர்ந்து விளக்கம் அடைகின்றன. அருச்சுனனுக்குக் கண்ணன் காட்டிய விசுவரூபக் காட்சிபோன்ற ஒருவிதக்காட்சியை இந்நூலைக் கற்போர் காண்பர் என்பது உறுதி.''*




# 1982




***கண்ணன் பாட்டுத் திறன்***

**Kannan Paattu-t-tiran**

Foreword by:
Dr K Meenakshisundaram, Director-in Charge,
Collegiate Education, Chennai, Tamilnadu

******

*''பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார் தானும் தனித்து நின்று பாரதியைக் கண்ணன் பாட்டுத்திறன் என்ற நூல்வழி தன் பற்றையும் பாசத்தையும் காட்டிப் போற்றுகிறார்.''*

*''பேராசிரியர் டாக்டர் ரெட்டியாரின் ஆழ்ந்த புலமையும், தெளிவுடன் கூறும் நெறியும் நூல் முழுதும் மின்னுகின்றன. ஆங்கிலம், வடமொழி, தமிழ் ஆகிய மொழிகளில் நிலைத்து வாழ்ந்து வரும் இலக்கிய இலக்கணங்களை நன்கு கற்றுத் தெளிந்து அவைகளிலுள்ள கருத்துக்களை, 'கண்ணன் பாட்டுத் திறனை' விளக்குவதற்கு ஆசிரியர் பயன்படுத்தியுள்ளமை அவருடைய பரந்துபட்ட ஆய்வு நெறியைப் புலப்படுத்துகிறது.''*




# 1982




***குயில்பாட்டு* - *ஒரு மதிப்பீடு***

**Kuyil Paattu - Oru Madhippeedhu**

Foreword by:
Dr RK Nagu, Tamil Professor,
Presidency College, Chennai, Tamilnadu

******

*''பேராசிரியர் டாக்டர் சுப்பு ரெட்டியார் அவர்கள் நல்லதொரு இலக்கியச் சுவைஞர். அறிவியல் அறிவும் கலை இயல் அறிவும் கைவசம் பெற்றவர். எல்லையிலா இலக்கிப் பயிற்சியும், எழுதிக் குவிக்கும் எழுத்துத் திறனும் வாய்ந்தவர். பேராசிரியர் ரெட்டியார்அவர்கள் மகாகவி பாரதியாரின் நூற்றாண்டுவிழா நினைவாகச் சில நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார். அவற்றுள் ஒன்றே குயில்பாட்டுப்பற்றிய இந்நூல்.''*

*''குயில்பாட்டைப் படிப்போர்க்குச் சலிப்பே தோன்றாது. அதுபோலக் குயில் பாட்டைப்பற்றிப் பேராசிரியர் எழுதியிருக்கும் இந்த நூலும் சலிப்பைத் தராது. பழந்தமிழ் இலக்கியத்திலிருந்து 'புதுத்தமிழ்' இலக்கியம்வரை பேராசிரியர் படித்தறிந்தவர் என்பதை இந்நூல் காட்டிக் கொடுக்கிறது.''*




# 1983




*பாரதீயம்*

**Bharatheeyam**

Foreword by:
Dr Avvai Naratajan

******

*‘‘ . . . . . . . . . . . அவற்றுள் பாரதியாரை மிகுந்த ஆர்வத்தோடு பாராட்டி மகிழும் நூல்கள் பல; ஆற்றலோடு ஆராய்ந்து போற்றும் நூல்கள் சில! . . . . இரண்டாவது வகையைச் சார்ந்தது பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்களின் பாரதீயம். பாரதியாரின் நூற்றாண்டில் அவர்தம் முப்பெரும் பாடல்களைப் பற்றித் தனித்தனியே முயன்று திறனாய்வு நூல்களைத் திறம்பட எழுதி வெளியிட்டுத் தம் போக்கில் கவிஞரின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடியவர் இப்பேராசிரியர். இவற்றிற்கும் மேலாக, பாரதியார் கவிதைகள் முழுவதையும் சாராகப் பிழிந்து வழங்கும் பெருநூலே பாரதீயம் என்னும் இந்நூல்."*




# 1983




***கம்பனில் மக்கள் குரல்***

**Kambanil Makkal Kural**

Foreword by:
Justice S Ratnavel Pandiyan

******

*''பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் இங்ஙனம் கம்பனை ஆழ்ந்து கற்றோருள் ஒருவர். பல்லாண்டுகளாப் பல்வேறு சந்தர்ப்பங்களில் இவர் எழுதிய பதினொரு கட்டுரைகளின் தொகுப்பே இந்நூல். பேராசிரியர் பல கோணங்களில் கம்பனைத் துய்த்தமையைக் கட்டுரைகள் பிரதிபலிக்கின்றன.''*

*''பேராசிரியர் டாக்டர் ரெட்டியார் பல்துறை அறிஞர். பல துறைகளையும் சிறப்பாக அறிவியல் துறைகளை முறையாகப் பயின்று அவற்றில் ஆழ்ந்த புலமையை அடைந்தவர். சிறந்த சிந்தையாளர். பல்வேறு துறைகளில் படைப்பிலக்கியங்களை வழங்கி தமிழன்னையைப் பெருமிதத்துடன் களிக்கச்செய்து வருகின்றவர். இவரை நடமாடும் கலைக்களஞ்சியம் என்று கூறினாலும் அக்கூற்று மிகைபடக் கூறியதாகாது.''*




# 1983

**புதுக்கவிதை - போக்கும், நோக்கும்**

**Puthukkavithai - Pokkum, Nokkum**

Foreword by:
Justice S Mohan

******

*‘‘இந்நூலில் அடித்தளமே பல்வேறு கவிதைகளை ஆராய்ந்த பின்பு அமைக்க ஆசிரியரின் எண்ண ஓட்டங்கள் போக்குக்கும் நோக்குக்கும் வழிகாட்டிகளாக அமைந்து இருக்கின்றன. இவர் பேனா, முனையில் இருந்து புறப்பட்டுள்ள நூல்களின் பெருக்கு இத்துடன் 56ஆக நிற்கிறது. காவிரி தவழும் திருச்சி மாவட்டத்தில் பிறந்ததால் வளம் பெற்ற அறிவைப் பெற்றிருக்கின்றார் போலும். வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரி தற்போது நமக்கு தண்ணீரைத் தராவிட்டாலும் பேராசிரியர் டாக்டர் ரெட்டியார் போன்றாரின் எழுத்துக் கூர்மை என்றுமே மழுங்கியதில்லை.’’*




# 1983




***சிலநோக்கில் நாலாயிரம்***

**Sila Nokkil Naalaayiram**

Foreword by:
Justice S R Sengottuvelan

******

*‘‘இந்நூலைப் பயிலும் நாம் திவ்வியப் பிரபந்தத்தைச் சுவைக்கின்றோம். இறைமையை உணர்கின்றோம். வைணவத்தின் அடிப்படைத் தத்துவத்தைப் புரிந்துகொள்ளுகின்றோம். அகப்பொருள் தத்துவத்தின் அடிப்படையிலும் (தோழி, தாய், மகள் பாசுரங்கள் மூலம்) இத்தத்துவம் விளக்கப்படும் அருமைப்பாட்டிலும் தெளிவு பெறுகின்றோம். பேராசிரியர் ரெட்டியார் பல அறிவியல் துறைகளில் வல்லவராதலால் கருத்துகளை விளக்கும் முறையில் இவர்தம் அறிவியல் பயிற்சி முறை இவருக்குப் பல்லாற்றானும் கைகொடுத்து உதவுவதை இறைவனின் அந்தர்யாமித்துவத்தை உணர்வதுபோல் உணர்ந்து மகிழ்கின்றோம்.’’*




# 1984




***வாழையடி வாழை***

**Vaazhaiyadi Vaazhai**

Foreword by:
Sri S Aranganayakam,
Minister for Education, Govt of Tamilnadu

******

*''. . . . . . . . பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அறிவியலில் - பல துறைகளில் - சிறுவர்களுக்காகவும் வளர்ந்தவர்களுக்காவும் பொதுமக்களுக்காகவும் இதுவரையில் பதினான்கு நூல்களை எழுதித் தமிழ் மொழிக்கு வளமூட்டியுள்ளார்.''*

*''கொஞ்சம் நில்லுங்கள் (பக்.264) என்ற தலைப்பில் நூல் படிப்போரை ஆசிரியர் சிந்திக்கத் தூண்டுகின்றார். 'கால்வழியில் புரட்சி' என்ற தலைப்பில் (பக்.268) உணவுப் பெருக்கம், தாவர இயலிலும் விலங்கியலிலும் சுட்டுவகையால் விளைந்த பயன்கள், இந்திய அறிவியலறிஞர்களால் வெளிநாடுகளில் கண்டறியப் பெற்ற நுணுக்கமான அறிவியல் உண்மைகள் முதலியன எழிலுற எடுத்துக்காட்டப்பெற்றுள்ளன. ஆசிரியர் பல புதிய கலைச்சொற்களைக் கையாண்டிருப்பது தமிழுக்கு புதிய வளத்தை வழங்குகின்றது. ஓய்வு பெற்ற நிலையிலும் ஓயாது பணியாற்றும் இவர் திறம் சிறப்புடையதாகும்.''*




# 1984




***சைவ சமய விளக்கு***

**Saiva Samaya Vilakku**

Foreword by:
Dr VA Devasenapathi, Director,
Dr S Radhakrishnan Advanced Centre of Philosophy,
University of Madras

******

*''உணவுப் பொருள்களான அரிசி, பருப்பு, காய்கறிகள் இவற்றே அதே நிலையில் உண்டு செரிமானம் செய்ய இயலாது. தகுந்த முறையில் சமைத்துப் பக்குவப்படுத்தி உண்டால் செரிமானம் செய்வது எளிது. அதேபோல், சைவ சித்தாந்த முடிவுகளையும், மரபையும் எளிதில் படித்து உணர்ந்து கொள்வதென்பது இயலாத காரியம். அவற்றைப் பக்குவப்படுத்தி எளிமையான சொற்களால் விளக்குதல் வேண்டும். அதனை இந்நூலாசிரியர் சிறந்த முறையில் செய்திருக்கின்றார்.''*




# 1985




**தம்பிரான் தோழர்**
**Thambiran Thozhar**

Foreword by:
TK Somasundaram,Porur, Chennai, Tamilnadu

******

*''தேவாரத் தலங்களிருக்கும் பண்டைத் தமிழ் நாட்டின் பல பகுதிகளையும், இந்தியத் துணைக் கட்டத்தின் வடபகுதியிலிருக்கும் தேவாரத்தலங்களையும், தெற்கே ஈழ நாட்டிலிருக்கும் இரு தேவாரத் தலங்களையும் குறிப்பிட்டு, பல தலங்களின் பெயர்க் காரணங்களையும், பல தலங்களிலுள்ள கோயில்களின் பெயர்க் காரணங்களையும் விளக்கி, தம்பிரான் தோழர் வழிபட்ட திருத்தலங்களின் பட்டியயலையும் இணைத்து, அத்தலங்கள் இருக்கும் இடங்களையும் ஆங்காங்கே குறிப்பிட்டு, அட்டவிடத்தலங்கள், சப்தவிடத்தலங்கள், சப்ததானத்தலங்கள் என்று கருதப்படும் சிறப்புத் தலங்களையும் குறிப்பிட்டு, தம்பிரான் தோழரின் வரலாற்றை முடிக்கின்றார் பேராசிரியர்.''*

# 1985




**Collected Papers**

Foreword by:
Prof KR Srinivasa Iyengar,
Former Vice-Chancellor, Andhra University

******

"As a teacher too, he has accumulated a body of variegated experience ranging from the Headmastership of the Turaiyur High School to the Headship of the Department of Tamil Studies in Sri Venkateswara University, Tirupati. Scholar, teacher, organizer of teachings, savant in Tamil language and literature, disseminator of knowledge about Vaishnava religion and philosophy, and well-informed and animated guide to the hundred hallowed Vaishnava shrines in South India, Prof Subbu Reddiar is a man of many parts, and these facets of his learning and personality stand revealed in the present collection of 27 papers, which is really a selection from a corpus comprising more than double the number".




# 1985




***வைணவ உரைவளம்***

**Vainava Uraivalam**

Foreword by:
Pulavar P Ramanujan, Thevanoor

******

*''வைணவ உரைவளம்' என்ற இந்த வெளியீடு தேனும் கன்னலும் கலந்த' சுவை நிறைந்த பாலைப் போன்றது. சுவையின்றித் தள்ள வேண்டிய பக்கம் இந்நூலில் ஒன்றுகூட இல்லை. ஆழ்வார்கள் பாசுரங்கள் சுவைத்து அநுபவிப்பதற்கு இந்நூல் போன்ற வேறொரு நூலை நான் கண்டதும் இல்லை; கேட்டதும் இல்லை''.*

*''அருளிச் செயலுக்குரிய வியாக்கியானங்கள் அனைத்தும் வடமொழியும் தமிழும் கலந்த மணிப் பிரவாள நடையில் அமைந்துள்ளன. அன்றியும் வைணவ சம்பிரதாயத்திற்கேயுரிய சில சம்பிரதாய வாக்கியங்கள், பரியாயச் சொற்கள் ஓர் ஆசானை அணுகிக் கேட்டாலன்றி இவற்றைப் புரிந்து கொள்ள முடியாது. எனவே, என்னைப் போன்றவர்களும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் முயன்றுள்ள பேராசிரியர் அவர்களின் அரியபணி - தெய்வப்பணி - யைச் சிறப்பாக வைணவப் பெருமக்களும் பொதுவாகத் தமிழ்நன்மக்களும் போற்றி ஆதரவு காட்டுவார்கள் என்பதற்கு ஐயம் இல்லை.''*




# 1985

### *ஆன்மீகமும் அறிவியலும்*

### **Aanmeekamum Ariviyalum**

Foreword by:
Dr N Sanjeevi,
Head, Dept of Tamil Literature,
University of Madras

******

*''டாக்டர் சுப்பு ரெட்டியார் அவர்களைத் தமிழுலகு நன்கறியும். கடந்த நாற்பதாண்டுகளாக இடையீடின்றி அறிவுப் பணியும், அருந்தமிழ்ப் பணியும் செய்துவரும் சான்றோர் அவர். அறிவியல், சமயம், இலக்கியம், கல்வியியல் ஆகிய துறைகளில் பல்வேறு தலைப்புகளில் பல்வேறு நூல்களை எழுதிப் பரிசுகளும், பாராட்டுகளும் பலப்பலவாகப் பெற்ற பெரியார் அவர். இவ்வகையில் இவருக்கு நிகர் இவரே எனலாம்.''*

*''டாக்டர் ரெட்டியார் சைவம், வைணவம் இரண்டையும் தமது இரு கண்களாகப் போற்றுபவர் என்பதும் தமிழிலக்கியத்தின் பல்வேறு காலத்து நூல்களிலும், உரைகளிலும் ஆழ்ந்த புலமையுடையவர் என்பதும் அவர்தம் இந்நூலாலும் உறுதி பெறும்''.*




# 1985




***ஞான சம்பந்தர்***

**Gnanasambandhar**

Foreword by: Prof Dr R Sarangapani,
Former-Head, Dept of Tamil,
Alagappa College, Karaikudi, Tamilnadu

******

*''ஆதலால் இந்நூல் வரலாறு அறிவதற்கு மட்டும் துணையாகாமல் தேவாரப் பாக்களை அறிந்து கொள்வதற்கும் துணையாகிறது. சில தேவாரப் பாடல்களுக்குச் சேக்கிழார் தரும் விளக்கங்களை ஆங்காங்கே பேராசிரியர் இயைத்துக் காட்டுவது படிப்போருக்கு நல்விருந்தாக அமைகின்றது''*

*''பேராசிரியர் திருமாலிடமும் ஈடுபாடுடையவராதலின் நாயன்மார்களின் வரலாறு கூறும்போதும் திருமாலைப் பற்றிய கருத்துக்களைத் தொடர்புப்படுத்திக் காட்டுவர்''*

*''நிறை மொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறை மொழிகளாய்'' தேவாரப் பாக்களைச் சுவையுடன் எடுத்துரைத்து நாயன்மார்கள் வழிபாடு செய்த தலங்களுக்கு விளக்கங் கூறி அவர்தம் வரலாறுகளை எளிய இனிய நடையில் நூலாக்கித் தரும் பேராசிரியர் சுப்பு ரெட்டியாரின் தொண்டு பாராட்டுதற்குரியது.''*



# 1986



***நாவுக்கரசர்***

**Naavukkarasar**

Foreword by:
Dr AM Parimanam,
Head, Dept of Tamil,
Pushpam College, Poondi, Tamilnadu

******

*“அவ்வகையில் பக்திப் பனுவல்களைப் பயிலுதலும் பயின்றவற்றைப் பயில்வோர் உளங்கொளப் பகர்தலும் ஓர் அரிய கலையாகும். தமிழில் அந்த அரிய கலை கைவசம் பெற்றவர்களுள் குறிப்பிடத்தக்கவர் தமிழ்ப்பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் ஆவார்கள்.’’*

*‘‘ஆழவார் பாசுரங்களுக்கு அமைந்துள்ள ஈடு முதலான வியாக்கியானங்களை நன்கு கற்றுணர்ந்து அநுபவித்ததால், டாக்டர் இரெட்டியாரவர்கள், நாயன்மார்களில் பதிகங்களை நோக்கும் கோணத்தில் புதுமையும், பொலிவும் திகழ்கின்றன. இரெட்டியாரவர்கள், அருட்பாசுரங்களைச் சுவைக்கும் பாங்கினை, அச்சுவையினைப் புலப்படுத்தும் பாணியை இந்நூலில் பக்கந்தோறும் காணமுடிகின்றது.’’*




# 1987




### *விட்டு சித்தன் விரித்த தமிழ்*
### Vittu Chithan Viritha Thamizh

Foreword by: Sri K Padmanabha Reddiar,
Vainava Chemmal, Peruvalanallur

******

*''சைவ சமயத்தைச் சார்ந்த இப்பெருமகனார் பதினான்கு இயல்களாக நடைபெறும் இந்தப் பனுவல் சமயக் காழ்ப்பின்றி பொதுநோக்கோடு உண்மையை உணர்ந்து பெரியாழ்வாரைப் பற்றிய பல கருத்துக்களையும் வைணவக் கொள்கைகளின் நுட்பங்களையும் சம்பிரதாய மரபு கெடாது இயன்ற அளவு வைணவ நடைகலந்து உணர்த்தும் திறன் அனைவராலும் போற்றத்தக்கதாகும். வைணவப் பெருமக்களாலும் பாராட்டத்தக்கதாகும்.*

*''இங்ஙனம் பல்வேறு கோணங்களில் பெரியாழ்வாரையும் அவரது திருமொழிகளின் விளக்கங்களையும் காட்டி நமக்கு அரியதோர் பக்தி விருந்தாக அமைந்த இப்பனுவல் உள்ளபடியே 'விட்டுசித்தன் விரித்த தமிழே' யாகும். பெரியாழ்வாரைப் புரிந்து கொள்ள விழைவாருக்கு இஃது ஓர் திறனாய்வு விளக்கமாகும்.''*




# 1987




***ஆழ்வார்களின் ஆரா அமுது***

**Aazhvaarkalin Aaraa Amudhu**

Foreword by:
*Pulavar* M Ramasamy,
Asst Headmaster, Senthamangalam Dist Board High School

******

*''ஆழவார்களின் ஆரா அமுது என்ற இந்த நூல் பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் தாம் திருப்பதியில் பணியாற்றிய ஒரு காலப் பகுதியில் திருப்பதியைச் சுற்றியுள்ள ஐந்து இடங்களில் நிகழ்த்திய ஆறு சொற்பொழிவுகள் அடங்கியது. ஒரு காலத்தில் ஒரு சில இடத்தினருக்குப் பயன்பட்ட பொழிவுகள் எல்லா இடத்தினருக்கும் எல்லாக்காலத்தினருக்கும் பயன்படட்டும் என்னும் பெருநோக்கால் இந்த ஆறு பொழிவுகளும் நூல் வடிவம் பெற்றுத் தமிழ் மக்களிடையே உலா வருகின்றன.''*

*''இத்தகைய பெருமையைப் பெற்ற இப்பேராசிரியப் பெருமகனார் படைத்த இப் பக்திப் பனுவல் பல சிறப்புகளைக் கொண்டது. நயம், நடை, உவமை, மேற்கோள், வைண சமயக் கருத்துக்கள், பொதுக் கருத்துக்கள், சொற்பொருள் விளக்கம், ஐயத்தைத்தெளிவுபடுத்துதல் ஆகிய எட்டு வகைகளில் இந்நூலில் உயிரோட்டத்தைக் காணலாம். வைணவ சமய உயிரோட்டத்தில் அடக்கமும் எட்டெழுத்தில் தானே உள்ளது?''*




# 1988




***நினைவுக் குமிழிகள் I***
**Ninaivu-k-Kumizhikal - I**

Foreword by:
*Silamboli* Dr S Chellappan

******

*''பேராசிரியர் ரெட்டியார் மூன்றாண்டு பருவம் நிரம்பும் முன்னர் தந்தையாரை இழந்தவர். எளிய குடும்பத்தில் வளர்ந்தவர்கள். என்றாலும் தன் கடின உழைப்பால் படிப்படியாக முன்னேறி இன்று கல்வியுலகு பாராட்டுகின்ற உயர்ந்த நிலையில் திகழ்கின்றார்கள். தம் வாழ்க்கைப் பயணம் பற்றி அவருடைய மனம் அசை போட்டதன் விளைவே இந்நூல்.''*

*''இந்நூலினால் பேராசிரியர் சுப்பு ரெட்டியார் தன் வரலாறு என்பதைவிட 1920, 1930 களில் தமிழ் நாட்டுச் சிற்றூர்களின் நிலை, மக்களின் வாழ்க்கை முறை, திண்ணைப் பள்ளிக் கூடங்களில் கல்வி கற்றுத்தந்த முறை, உயர்நிலைப்பள்ளி -கல்லூரிகளில் கல்வி நிலை போன்றவற்றையெல்லாம் படம் பிடித்துக் காட்டுகின்ற சமூக வரலாற்று விளக்க நூல் என்று கூறுவது பொருத்தமாக இருக்கும்.''*




# 1988




***தமிழ் இலக்கியங்களில் அறம் - நீதி - முறைமை***

**Thamizh Illakkiyankalil Aram, Needhi, Muraimai**

Foreword by:
Justice S Natarajan

******

*‘முறைமை’ என்ற சொல்லை நெறிமுறை தவறாது நிகழும் ஊழ், ஞாலத்திகிரி, முது நீர்த்திகிரி, காலத்திகிரி, கோலத்திகிரி போன்ற பொருள்களுடன் புணர்த்தி வைணவ இலக்கியங்களுடன் மேற்கோள்களுடனும் இக்கால அறிவியல் வள்ரச்சியுடனும் ஒப்பிட்டுப் பேசும் பாங்கு மிகவும் சுவையான பகுதியாகும் (பக்.303 - 309).’’*

*‘‘பொதுவாக நூல் முழுதும், ஆசிரியரின் இலக்கண இலக்கிய அறிவையும், குறிப்பாக வைணவ சமயத்திலும் அதன் இலக்கியங்கள், தத்துவங்கள் ஆகியவற்றில் அவருக்குள்ள ஆழ்ந்த பயிற்சியையும் வெளிப்படுத்துகின்றன.’’*

